உ

# சபாபதி நாவலர்
## சரித்திரச் சுருக்கம்






சபாநாதன்

சாலை

சிவமயம்.

# சபாபதி நாவலர்

## சரித்திரச் சுருக்கம்




ஷையாரின் மருகர்

வடகோவை - அ. சிவகுருநாதன்

பதிப்பித்தது.

சபாபதி நாவலர் ஞாபக நிலையத்தின்

வெளியீடு - க.

சென்னை:

வித்தியாநுபாலனயந்திரசாலை

1955.

# முகவுரை

'மன்னனுமாசறக்கற்றோனுஞ்சீர் தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்—மன்னற்குத்
தன்றேச மல்லாற் சிறப்பில்லைக் கற்றோர்க்குச்
சென்ற விடமெல்லாஞ் சிறப்பு."

என்பதனால் கற்றோர் சிறப்புச் சொல்லியபடி. ஒருதேசத்தின் சீரும் சிறப்பும் அத்தேசத்தின் தவப்பயனாய்க் காலந்தோறும் அருமை பெருமையாகத் தோன்றும் நுண்மாண் நுழைபுலமுடையராகும் புலவர் பெருமக்களால் அளவிடப்படும்.

"அறம்பொரு ளின்பம் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டு—முறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியினூங் கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை."

"நற்பொருள் செய்வார்க் கிடம்பொருள் செய்வார்க்கு
மஃதிடம்"

என்றார் உயர்ந்தோர். இதனால் கல்வியின் சிறப்புக் கூறியவாறு. கல்வியறிவினால் சிறந்து கல்வியபிவிருத்தியின்பொருட்டுத் தமது வாழ்நாளைப் போக்கிப்போந்த தியாகசீலரான உத்தமர் * வாழ்க்கையினை ஏனையர் பலருமறிந்து பயனெய்தும்வண்ணம் அவர்கள் வாழ்க்கையைப்பற்றிய சரித்திரங்கள் வெளியிடப்படுதல் உலகவழக்காகும். நிற்க.

திராவிடப்பிரகாசிகையின் 2ம் பதிப்பு வெளிவரும் போது அந்நூலைப்பற்றி உலகப் பொதுமொழியாகும் ஆங்கிலத்தில் முன்னுரை ஒன்று எழுதியுதவும்படி காலஞ்சென்ற பேராசிரியர் ஸ்ரீ சு. சிவபாதசுந்தரம் (B.A.) அவர்களை வேண்டிக்கொண்டேன். அப்பெரியார் அழகிய முன்னுரை எழுதியதோடு நூலாசிரியர் வாழ்க்கை வரலாறும் எழுதிச்சேர்க்கும்படி எனக்குத் தெரிவித்தார்கள்.

"ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன் றாம்புலவர்
வார்த்தை பதினா யிரத்தொருவர்"

என்பதற்கேற்ப நாவலம் நன்கமையப்பெற்ற சபாபதி நாவலரைப்பற்றிப் போதியபடி எனக்குத் தெரியாமையி

---

* கற்றவர்களுண் ணுங்கனியேபோற்றி. —(அப்பர் தேவாரம்.)
கற்றவர்விழுங்குங்கற்பகக்கனி. —(திருவிசைப்பா.,

ளுல், யான் வேண்டியபடி, நாவலரவர்களை நேரே கண்டு பழகிய திருமயிலை - தமிழ்ப்பண்டிதர் காலஞ்சென்ற சே. சோமசுந்தரம்பிள்ளை அவர்கள் அப்போது சரிதம் எழுதக்கூடியதாய் வாய்க்கப் பெற்ருர். அதனைத் தழுவி மேலும் சில குறிப்புகளுடன் இப்போது இந்தச் சரித்திரச் சுருக்கம் வெளிவரலாயிற்று.

நாவலரவர்கள் இயற்றிய சிதம்பரசபாநாதபுராணம் திருச்சிற்றம்பலவந்தாதி முதலிய நூல்களில் வரும் பொருட் செறிவுடைய சில அருஞ்செய்யுட்களை இதன்கண் காணலாம். ஆங்கில அறிவுடையோருக்குப் பயன்படுமாறு திராவிடப்பிரகாசிகைக்கு ஆங்கிலத்தில் எழுதப்பெற்ற முன்னுரை இதில் அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

இச்சரித்திரம் அச்சாகும்போது அச்சுப்பிழைகளைத் திருத்தியும் நூலைப் பார்வைசெய்தும் துணையாயிருந்த எனது அரிய நண்பர் திருமயிலை-சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை அவர்களுக்கு எனது மனப்பூர்வமான நன்றியுரியது.

இணுவில் வித்துவான் அம்பிகைபாகர் பேரனுராகிய உபாத்தியாயர் திரு. வை. கதிர்காமநாதனும், மட்டுவில் உபாத்தியாயர் திரு. இ. சிதம்பரப்பிள்ளையும் இப்பதிப்புக்குரிய கையெழுத்துப் பிரதிகளை எழுதியுதவியது குறிப்பிடத் தக்கது.

வடகோவையில் அமைக்கப்படும் சபாபதிநாவலர் ஞாபகமண்டபம் அவர்களியற்றிய நூல்களுக்கு நிலையமாமாறு வேண்டிய நன்முயற்சி நடைபெறுதற்குத் துணையாக அன்பர்களும் அபிமானிகளாகும் தனவான்களும் இதனை மகிழ்ந்தேற்று இயன்ற பொருளுதவி ஊக்கமளிப்பரென நம்புகின்றேன்.

வடகோவை
ஜயஸு
கார்த்திகைப்பூரணை

அ. சிவகுருநாதன்.

உ

கணபதி துணை

# சபாபதி நாவலர் சரித்திரச் சுருக்கம்

திருவாவடுதுறை யாதீனத்து

## ஸ்ரீமத்-இராமலிங்க சுவாமிகள்

இயற்றியது.

வாய்ந்தபுகழ் திருக்கோண மாமலைமுற்
பலதலமு மாண்புற் றோங்கி
யேய்ந்தபெருஞ் செல்வமும்வான் கல்வியுமேன்
மேலும்வள ரீழ நாட்டி
லாய்ந்தபல வளங்களுஞ்சால் வடகோவைப்
பொன்னகரி லளவில் சீர்த்தி
தோய்ந்தநான் மறைச்சைவ சமயமெங்கும்
தழைத்தோங்கத் தோன்றி வாழ்வோன். 1

எங்களா வடுதுறைச்சுப் பிரமணிய
தேசிகன்பா லெய்தித் தீக்கை
தங்கமுற மூன்றும்பெற் றவனடியா
னெனப்பலருஞ் சொல்லப் பெற்றோன்
பங்கமற வழிவழியே யுயர்சைவக்
குடியினிலுற் பவித்து மேன்மைப்
புங்கவரும் புகழ்நீறும் கண்மணியு
மஞ்செழுத்தும் பொருளாக் கொண்டோன். 2

பவஞான, மகற்று புகழ்த், தென்கலையும்
வடகலையும் படிமே லோங்கத்
தவஞான வருணமச்சி வாயகுரு
பரன்மரபு தழைந்து மல்க

வவஞான மொழித்தருளு மகத்தியமா
முனிவரத்தா லவத ரித்த
சிவஞான யோகியிரு திருவடியே
சிந்திக்குந் தியானச் சீரான். 3

சுவைபெருக வுரையெழுதுந் திறனுநாற்
கவிபாடுந் துணிவுங் கற்றோ
* ரவைபுகழப் பிரசங்கஞ் செயும்வலியுஞ்
சொற்போரி லளவை நூலா
னவையறக்கற் றோரவைமுன் வாதிகள்கை
வாய்புதைத்து நடுந டுங்கிக்
கவன்மருவி யோட்டெடுப்ப வென்றுசுவ
மதநிறுத்துங் கணக்கின் மாண்பும். 4

நேயமிலா ரும்வேட்ப நெறிப்படச்சொற்
றெடுத்துரைக்கும் வலியு நேரில்

---

* பிரசங்கஞ் செய்யுமாறு வேண்டும்போது 'ஆயிரம் தலை கண்டால் பிரசங்கஞ் செய்யலாம்' எனச் சபாபதி நாவலர் கூறிய தாகப் புலவர் சொல்லிக்கொள்வர். இதன் கருத்து பெருங் கூட்டத்தில் கற்றோர் சிலரேனுமிருந்து பிரசங்கங் கேட்கக் கூடும் என்பதாம். அந்நாளில் முறையாகக் கற்றோர் சபையில் நாவலர்கள் கல்விமான்கள் கல்விப் பிரசங்கஞ் செய்வதில் புகழ் பெற்றார். இந்நாளில் 'பிரசங்கம் பிரசங்கம்' என்று சொல்லப் படினும் அவ்வரிய வேலைக்குருகராவாரைக் காண்பது எளி தன்று.

நன்னூலில் சொல்லியபடி நல்லாசிரியரிலக்கணம் நன் மாணுக்கரிலக்கணம் என்னும் இவைகளைப் பேணி, தமிழ்க் கல்வி கற்பதில் மிக்கவார்வமுடையோர் இருந்தகாலத்தில் பிரசங்கம் இப்படி அருமையாய்க் கிடைத்துப் பயனளித்தது. குரு சீடக்கிரமத்தில் பெறும் முறையான கல்வி யருகிவரும் இக்காலத்தில் பிரசங்கத்தினல் எய்தும் பயனைப்பற்றி என் சொல்வது.

பாயதமிழ்க் கடனிலைகண் டுணர்ந்துவட
நூல்பயினுன் னறிவும் பன்னூ
லாயசிறி துணர்ந்தாரு மெளிதுணர
வருநூல்சொல் லறிவு மான்ற
மேயபுகழ் மண்ணினுறை புலவரெலாந்
துதியெடுத்து வியப்பப் பெற்றோன். 5

பன்னியவின் சொல்பொறுமை யடக்கமுடன்
வாய்மைகொடை பண்பொ ழுக்க
முன்னியநன் னடுவுநிலை கண்ணோட்டஞ்
சான்றாண்மை முதிரு மன்பு
துன்னியவொப் புரவுமுதற் பலநலமு
மொருங்குடைய தூய சீலன்
மன்னியநட் பென்பாலும் வைத்தபுகழ்ச்
சபாபதிநா வலன்றான் மன்னோ. 6

---

## திருமயிலை. சே. சோமசுந்தரம் பிள்ளை
### எழுதியது

**ஜனனம்:**

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார் ஆகிய இரு சமயாசாரியர்கள் அருளிச்செய்த திருப்பதிகம் ஒவ்வொன்றிலும் இடம் பெறத்தக்க நற்றவம் வாய்ந்த இராவணேசன் அரசுபுரிந்த நாடாகிய இலங்கையின் வடபாகமாகிய யாழ்ப்பாணத்து வடகோவையிலே, சைவ வேளாண் மரபிலே கல்வி அறிவு ஒழுக்கங்களில் சிறந்த சுயம்புநாத பிள்ளை என்னும் சிவபக்தர் ஒருவர் இருந்தார். அவர் மனைவியார் கற்பிற் சிறந்த தெய்வயானை என்பவர். அவ்விருவரும் சிவனடியைச் சிறிதும் மறவாத பற்றுடையவராகி இல்லறம் நடாத்திவரும் நாளிலே தமிழ்நாடு செய்த

அருந்தவப்பயனாக சாலிவாகன சகாப்தம் 1766ல் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தனர். அக்குழந்தை பின் சபாபதியினிடம் அன்பு பூண்டு புலவர் சபாபதியாய் விளங் கும் என்பதை முன்னுணர்ந்தேபோலும் அதற்குச் **சபாபதி** என்று நாமகரணஞ் சூட்டினர்.

> "இந்துசேகர னடியரை யவனென வீண்டுப்
> புந்திசெய்குணச் சுயம்புவேள் புரிந்தமெய்த் தவத்தா
> லந்தண்மாவிலஞ் சபாபதி யறிஞனென் றேத்த
> வந்துதோன்றிய சைவசூ ளாமணி மாதோ."

இது, இவரியற்றிய 'இயேசுமத சங்கற்பநிராகரணம்' என் னும் நூலுக்கு நீதிபதி சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் அளித்த சிறப்புப் பாயிரத்திற் கண்டது.

> "இன்னுமென்யாம் பலபுகற லியற்பெயர்கொண் டமைக்கேற்ப
> பன்னுகலை ஞர்களவையிற் பதியாகும் பான்மையினன்
> துன்னுபர சமயநெறி தொகைத்திறுத்துப் புவியின்மிசை
> மன்னுபுகழ் திறுவுசபா பதிநாவல வன்மாதோ."

இது, இவரியற்றிய சிதம்பர சபாநாத புராணத்துக்குத் திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீமத் ஆறுமுக சுவாமிகள் கொடுத்த சிறப்புப் பாயிரத்துக் கண்டது. இக்கவிகளால் இவர் தனது இடுகுறிப் பெயரைக் காரணப்பெயராக்கினர் என்பது பெறப்படும்.

## கல்வி பயின்றது:

அவர் தாய் தந்தையர் உரிய பருவத்திலே விதிப்படி வித்தியாரம்பஞ் செய்தனர். அக்காலத்து வடகோவைப் பதியிலே வடமொழி தென்மொழிக் கல்வியிற் சிறந்த பிரமஸ்ரீ ஜெகந்நாதையர்பால் ஆரம்பக் கல்வி பயின்று

வந்தார். பிறகு ஸம்ஸ்கிருதம், தமிழ் இரண்டிலும் பெரும் புலமை வாய்ந்த நீர்வேலி - சிவசங்கரபண்டிதரிடம் வடமொழி தென்மொழி இரண்டையும் முறையாகக் கற்று வந்தனர். நன்மாணுக்கருக்குரிய இலக்கணங்களோடு கற்று வருங்கால் அரச பாஷையாகிய ஆங்கிலமும் சிலகாலங் கற்று அம்மொழியிலும் விற்பத்தியுடையராயினர். வயதில் இளையவராயினும் இவரின் தருக்க அறிவின் திறமையைக் கண்ட நீதிபதிகளாகிய தென்கோவைக் குமாரசூரியரும், கதிர்வேற் பிள்ளையும் இவருக்கு ஆங்கில பாஷையை நன்கு பயிற்றுவித்துச் சட்டநூற் கல்வி புகட்டினால் அரசாங் கத்திற் சிறந்த நிபுணராய் மதிக்கப்படுவர் என்பதை இவர் தந்தையாருக்குத் தெரிவித்தனர். இங்கிலீஷ் படிப்பதில் தம் பிள்ளையின் கருத்து எப்படியென்று தந்தையார் வினவினராக, அக்காலத்தில் இந்துக்கள் ஆங்கிலம் கற்றற்குரிய இந்துபாடசாலைகள் இல்லாமையானும், மிஷன் பாடசாலைகளிற் கற்றல் தமக்கும் தம் சமயத்துக்கும் இழுக்காம் எனக் கொண்டும் அதற்குடன்பாடில்லாது விடுத்தனர். மெய்ஞ்ஞான வளர்ச்சிக்கும் சைவாசார ஒழுக்கத்துக்கும் மேனாட்டுக் கல்விமுறை பொருந்தாது என்பதை இளமையில் நன்குணர்ந்தார். இவர் தமது ஞானமிர்த பத்திரிகையில் 'இந்து மாணுக்கருக்குக் கிறிஸ்தவர் பாடசாலைக் கல்வி ஏதமாம்' என வருங் கட்டுரையில் மிஷன்பாடசாலைக் கல்வி முறையால் வரும் குறைபாடுகளை எடுத்துக் காட்டியுள்ளது இவரது மனப்பான்மையை விளக்கும். செந்தமிழ்ப் புலமைத் தலைமைபூணும் பெருநோக்கத்தோடு கலைபயின்று வரும் நாளில் குன்மநோய் இவரைப் பீடித்துக் கொண்டது. வைத்தியத்தினுலும் அது தீர்ந்திலது. உணவுதானும் ஏற்றுக்கொள்ளக்கூடாத அளவு நோய் அதிகரித்துத் தன்

பத்தைக் கொடுத்தது. "இந்நோயினால் வருந்தி வாணாள் வீணாள் ஆவதிலும் உயிர் விடுதல் நன்று. அதிலும் சிவ சந்நிதானத்தில் உபவாசமிருந்து உயிர் துறத்தல் மிகவும் நன்று" என தீர்மானித்து உடனே நல்லூர்க் கந்தசுவாமி கோயிலையடைந்து முருகப்பெருமானை வணங்கி "புண்ணிய புராண முழுமுதல்வரான சண்முகநாதனே! சுப்பிரமணிய சுவாமீ! தமியேனைப்பற்றிய இந்நோய் தீர்த்து அடிமை கொண்டருள வேண்டும்" என்று பிரார்த்தித்து, கந்தபுராண தோத்திரப் பாக்கள், கந்தாலங்காரம், கந்தரநுபூதி, கந்தர் கலிவெண்பா, திருப்புகழ் என்னும் திவ்விய பிரபந்தங்களைப் பாராயணஞ் செய்துகொண்டு அங்கே சிலகாலம் இருந்தார். இவ்வாறு ஒரு மண்டலத்துக்குமேல் அரிய உபவாசம் அநுட்டித்து வரும்போது ஒருநாளிரவு சொப்பனத்தில் அர்ச்சகர் பாயசங் கொடுத்தருளப் பெற்றுண்டு ஆனந்த பரவசராய்த் துதி யெடுத்து;

"அந்தமி லொளியின்சீரா லறுமுகம் படைத்த பண்பால்
எந்தைகண் ணின்றும் வந்த வியற்கையாற் சத்தியாம்பேர்
தந்திடும் பனுவல் பெற்ற தன்மையாற் றனிவேற் பெம்மான்
கந்தனே யென்ன நின்னைக் கண்டுளக் கவலை நீத்தோம்."

எனப் பலவாறு திருவருளின் திறத்தை வியந்து கந்தவேள் திருவடிப்பற்று மேன்மேலும் ஓங்கி வளர அப்பெருமான் இன்னருள் பழுத்த சந்நிதானத்தில் சிலபகல் தொண்டு செய்து வந்தார். இதுமுதல் இவரது எதிர்காலச் சரித்தி ரத்தினை ஆராயும்போது இவர் பாராயணம் பண்ணிவந்த கந்தர்கலி வெண்பாவின் இறுதிக்கண்ணதாகிய,

"........................................உள்ளமுவந்
தாறு திருப்பதிகண் டாறெழுத்து மன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே—நாறுமலர்க்

கந்திப் பொதும்பரொழு காரலைக்குஞ் சீரலைவாய்ச்
செந்திப் பதிபுரக்குஞ் செவ்வேளே—சந்ததமும்
பல்கோடி சன்மப் பகையு மவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்—பல்கோடி
பாதகமுஞ் செய்வினையும் பாம்பும் பசாசுமடற்
பூதமுந்தீ நீரும் பொருபடையும்—தீதகலா
வெவ்விடமுந் துட்ட மிருகமுத லாமெவையும்
எவ்விடம்வந் தெம்மை யெதிர்த்தாலும்—அவ்விடத்திற்
பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்டோளும்
அச்சமகற்று மயில் வேலும்—கச்சைத்
திருவரையுஞ் சீறடியுஞ் செங்கையு மீரா
றருள்விழியு மாமுகங்க ளாறும்—விரிகிரணம்
சிந்தப் புனைந்த திருமுடிக ளோராறும்
எந்தத் திசையு மெதிர்தோன்ற—வந்திடுக்கண்
எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமுந் தந்துபுகுந்
துல்லாச மாக வுளத்திருந்து—பல்விதமாம்
ஆசுமுத னாற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையும்—ஓசை
எழுத்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்—தொழுக்கமுடன்
இம்மைப் பிறப்பி லிருவா தனையகற்றி
மும்மைப் பெருமலங்கண் மோசித்துத்—தம்மைவிடுத்
தாயும் பழையவடி யாருடன் கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச்—சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி யாட்கொண்
டடியேற்கு முன்னின் றருள்."

என்னும் வரிகளில் குமரகுருபர சுவாமிகள் வேண்டியபடி பலவரங்களைச் பெற்றுச் சுகமாய் வாழ்ந்து வந்தார். நல்லைச் சுப்பிரமணியக் கடவுள் பதிகம் இவர் செய்த பிரபந்தங்களில் ஒன்றாகும். அது சுப்பிரமணியக் கடவுள் திருவிளையாடலை விளக்குவது. குருநாதனும் முருகப்பெருமான் இவரது

உபாசனுமூர்த்தியாம். இவர் செய்த நூல்களில் சுப்பிர மணியப் பெருமானுக்குப் பாடிய வணக்கச் செய்யுட்கள் இதனை விளக்கும்.

"கற்பக நாட்டும் வைவேற் கந்தவே டுணைவின் னோர்க்குக்
கற்பக நாட்டில் வாழ்வு கண்டவ விடுவ சேனன்
கற்பக நாட்டி யத்திற் காதல வென்னிற் றில்லைக்
கற்பக நாட்டின் றேகுஞ் சமன்வலி கடப்பிக் கும்மே.

இது, இவரியற்றிய சிதம்பர சபாநாத புராணத்தில் வரும் காப்புச் செய்யுள். இதில் மூத்தபிள்ளையார் துதியும், இளைய பிள்ளையாராகும் சுப்பிரமணியர் துதியும் கூறப்படுகின்றன. நாவலரவர்கள் சிவபூசைக்குரிய பாத்திரங்களுள் முக்கிய மான வெள்ளிக்குடமானது சுழிபுரம் பறுளைக் கந்தசுவாமி கோயிலுக்கு 40 வருடங்களுக்குமுன் நன்கொடையாக உதவப் பெற்று அக்கோயிலில் அபிடேகங்கள் நடைபெறும் போது உருத்திரம் ஸ்நபனங்களுக்கு விசேட கும்பமாக வைத்தாளப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

இப்பெரியார் சிதம்பரம் சைவப்பிரகாச வித்தியா சாலையில் ஆறுமுகநாவலரவர்கள் விரும்பியபடி சிலகாலம் தலைமைத் தமிழ்ப் போதகாசிரியராக அமர்ந்திருந்து அந்த வித்தியாலயத்தை அந்நாளில் நடைபெறச் செய்தார்.

## அருளுபதேசம் பெற்றது:

பின்பு திருவாவடுதுறையை அடைந்து அவ்வாதீனத் துப் பதினறுவது மகாசந்நிதானமாய் விளங்கிய ஸ்ரீ சுப்பிர மணிய தேசிக சுவாமிகள் அருளுபதேசம் பெற்று அவர்கள் முன்னிலையில் 12 வருடகாலம் ஞானநூல்களையெல்லாம் மரபாற் கற்று வல்லராய் இலக்கிய, இலக்கண, தர்க்க,

வேதாந்த, சித்தாந்த சாகரமாய் அவ்வாதீன வித்துவசிகா மணியாய் விளங்கி மிக்க புகழும் தக்க வரிசையும் பெற்ருர். சுப்பிரமணிய உபாசனையினுல் இந்நிலையைப் பெற்ருர் எனலாம். மேலும் நோய்தீர்த்தருளிய அப்பெருமான் திருநாமம் இவருக்கு உபதேசம் செய்த தேசிக சுவாமி களுக்கு அமைந்திருத்தல் வியப்புடைத்து.

## விவாகம் செய்தது:

இவர் நன்மாமனுர் சுழிபுரம் க. சரவணமுத்து என்பவருக்குப் பல ஆண்மக்கள் பிறந்தும் பெண்மகவு இல்லாக் குறையினுல் அவரும் மனைவியும் பெருமானை பலகாலம் வேண்டியிருந்தனர். சபாபதியானவர் இளம்பருவத்திற் படித்துவரும் நாளில், அவர் ஆற்றலைக்கண்டு மகிழ்ந்து மருமகனுக்குக் கொடுக்கக்கூடிய தகுதியான வெகுமதி இல்லையே என்றிருந்த நினைவின் பயனுகப் பின்னுளில் இவர்களுக்கு ஒரு பெண் பிறந்தது. இளைஞராகிய சபாபதி என்பார் தென்னிந்தியாவுக்குச் சென்று திருவாவடுதுறை ஆதீனத்தில் பலவருடகாலம் கலைகள் பயின்று தமிழ் நாட்டிலே பிரசங்கங்கள் செய்தும், நூல்களியற்றியும், நன் மாணுக்கருக்குக் கல்வி புகட்டியும் பொழுது போக்கினுர். இவர் நெடுங்காலம் யாழ்ப்பாணம் வரவில்லையே, விவாகம் நடக்கவில்லையே என்று பெற்ருேரும் உறவினரும் இவர் வரவை எதிர்பார்த்திருந்தனர். இவர் மாமன் மகள் ஒரு வித்துவானை மணம்புரிவாள் என்று சோதிடம் வல்லார் கூறினுர். தமக்கு இப்படி விவாகம் நடக்குமென்றறிந்த இவர், யாழ்ப்பாணம் வந்தபோது இவருக்கும் மாமன் மகளுக்கும் விவாகம் நடந்தது. சிலகாலம் இல்வாழ்க்கையி

விருந்து மீண்டும் தமிழ்நாட்டுக்குச் சென்று முன்போலச் சற்கருமங்களைச் செய்யத் தொடங்கினர்.

## நாவலர் பட்டம்:

அவையோர் வியக்கச் சொல்லும் உரைவன்மையினையும், நிகழ்த்தும் சைவப்பிரசங்கப் பிரவாக மகிமையினையும், மாயாவாதி முதலிய குதர்க்கர்களும் பிறரும் நாவடங்கச் செய்யும் நியாயவாதச் சொற்போர் வென்றியினையும் குறித்துச் சுப்பிரமணிய யோகீந்திரர் இவருக்கு, 'நாவலர்' என்னும் பட்டத்தினை மனமகிழ்ந்து அளித்து ஆதரிக்க; ஞானசம்பந்த தேசிக சுவாமிகள் மகா வித்துவத் விசேடணத்தோடு நிலையிட்டு ஆசீர்வாதஞ் செய்தருளா நின்றார்கள்.

மெய்கண்ட சாத்திரமாகிய சிவஞானசித்தியார் சுபக்கம் இருவருரையுடன் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 15ம் இலக்க வெளியீடாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இந்தப் பதிப்பில் நூலாசிரியரான அருணந்தி சிவாசாரியார் சரித்திரச் சுருக்கமும், உரையாசிரியர்களான சிவஞான யோகிகள், சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் சரித்திரச் சுருக்கங்களும் அடங்கியுள்ளன. மகாசந்நிதானம் சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் சரித்திரத்தில் வரும் விசேடக்குறிப்பு, 'நாவலரேறு' என்று சொல்லப்படும் யாழ்ப்பாணத்து வடகோவைச் சபாபதி நாவலரவர்கள் நமது தேசிக சுவாமிகளிடத்தே உபதேசம் பெற்று ஆதீன வித்துவானாக விளங்கினார்கள்" என்பதாம். சபாபதி நாவலரவர்கள் குருபத்தியிற் சிறந்தவர்கள். இதனை இவர் செய்த நூல்களில் சுப்பிரமணிய தேசிக சுவாமிகளுக்குச் செய்த வணக்கத்தால் அறியலாம்.

"தாவடுநற் றிருக்கயிலைத் திருநந்தி மரபுநனி
தழைக்கப் போந்து
தேவடுவொன் றில்லாத மாதவத்தோ ரகவிருளைச்
சீக்கும் பானு
மாவடுவின் வகிரன்ன கண்ணிவழி படமாசின்
மணிதான் மேவு
மாவடுதண் டுறைசையிற்சுப் பிரமணிய தேசிகன்று
ளடைந்துய்ந் தேனால்."

இது இவர் பாடிய திருவிடைமருதூர்ப் பதிற்றுப்பத்தந்தாதியிற் கண்டது.

நாவலரவர்கள் வித்துவ மாட்சியினையும், கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய பிரசங்க வன்மையையும்பற்றி மடாலயத்துக் கூடும் புலவர் பெருமக்களும் பிறரும் வியந்து பேசும்போது சுப்பிரமணிய தேசிகர் அதற்குப் பதிலாக, 'ஸ்ரீசபாபதிகள் சிவஞான யோகிகள் உபாசகர்' என்று தந்துணிபு கூறுவார்கள். அதுமட்டோ, சுப்பிரமணிய தேசிகர் சபாபதி நாவலர்பால் கொண்ட அன்பின் மிகுதியால் அவரைத் தமது அபிமான புதல்வராக வைத்து உபசரித்து வேண்டுஞ் சன்மானங்கள் செய்து கொண்டாடி வந்தனரென்பது பலரும் நன்கறிந்த விஷயமே. நாவலரவர்களியற்றிய நூல்களுள், சிவஞானமுனிவர் வணக்கம் பெரிதுங் கூறப்படுதலால் அம்முனிவர் இவரது உபாசனு குரவர் என்பது பெறப்படும்.

"தவமுந் தவமுடையார்க் காகும்" என்றாற்போல இவர் சிவஞான யோகிகளை உபாசித்ததனாற் போலும் "சபாபதி நாவலரவர்கள் உரைநடை சிவஞானமுனிவர் உரைநடைபோலச் சிறந்து நிலவும் பெருமை வாய்ந்தது" எனப் புலவர் புகழ்ந்து போற்றுவர்.

## திராவிட மாபாடியம் பெற்றது:

சர்வகலா ரூபமாய் விளங்கும் திராவிட மாபாடியத்தினை துறைசை ஆதீனத்தார் அதிதீவிர பக்குவமுடையார்க்கே வாசிக்கக் கொடுப்பது வழக்கமாகவும், மகாசந்நிதானம் நமது புலவர் பெருமானிடம் கொடுத்து வைத்திருந்தார்கள். அவ்வாறு கொடுத்து வைத்தது நமது வித்துவ சிரோமணியிடம் அவர்கள் கொண்டிருந்த நன்மதிப்பையும், பூண்டிருந்த அன்பையுங் காட்டுகின்றது. நாவலரவர்கள் அப்பாடியக் கலையைக் கைக்கொண்டு தமது ஆதீன ஞான நிதியாக வைத்துப் பூசித்து ஆராய்ச்சி செய்து வந்தார்கள்.

## தேசாபிமானமும், பாஷாபிமானமும், சமயாபிமானமும்:

நாவலரவர்கள் சுதேச நன்மையை நாடியும், ஆரிய மதாபிவிருத்தி நாடியும், சைவசமயாபிவிருத்தி நாடியும், சென்னையின்கண்ணமர்ந்தும், திராவிடதேசமெங்கும் விஜயஞ் செய்தும், பிரபல கிரந்தங்களாலும், பத்திரிகைகளாலும், பிரசங்கங்களாலும் பிரபல சற்கருமங்களைச் செய்து வந்தார்கள். அவற்றைக் குறித்துத் திராவிட தேசாபிமானிகளும், ஆரியமதாபிமானிகளும், சைவசமயாபிமானிகளுமான எல்லோரும் பாராட்டினர். இராமநாதபுரம் ஸ்ரீபாஸ்கரசேதுபதி அவர்கள் நாவலரவர்கட்கு எழுதிய திருமுகங்களில் 'சைவசிகாமணியாயும், பரசமய கோளரியாயும் விளங்கா நிற்கும் கனம் நாவலரவர்களுக்கு' என்றும், 'சைவப்பயிர் தழைக்கப் பிரசங்க இடிமுழக்குடனும், விபூதி ருத்திராட்சப் பொலிவாகும் மின்னலுடனும் ஓங்கி வளரும் ஒரு முகிலாகிய கனம் நாவலரவர்களுக்கு' என்றும், 'தங்களை

யாம் அழைத்துவந்த காரணம் தங்கள் பிரசங்க அமிர்தத்தினை நுகருமாறும், நம் சமஸ்தானத்திலுள்ள சகல பிரஜைகள் சைவசமய உண்மைகள் தேறுமாறும், திராவிட சைவ சித்தாந்த வித்தியா போதஞ் செய்து போதரும் கடப்பாட்டினைத் தாங்கள் மேவுதல் வேண்டுமென்றே' என்றும் வரைந்துள்ளார்கள். இவை சைவசமயாபி விருத்தியிலும், பாஷாபி விருத்தியிலும் அவருக்கிருந்த ஊக்கத்தினை அறிவிக்கின்றன. மதுரை ஆதீன மடாதிபதியாய் வீற்றிருந்த ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகளும், திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீன மடாதிபதியாய் வீற்றிருந்த ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகளும் அவ்வாதீன மடாதிபதியாய் வீற்றிருந்த ஸ்ரீ அம்பலவாணதேசிக சுவாமிகளும், சூரியனார் கோயில் ஆதீன மடாதிபதியாய் வீற்றிருந்த ஸ்ரீ முத்துக்குமாரதேசிக சுவாமிகளும், நாவலரவர்கள் செய்து போந்த சைவசமயோத்தாரண சற்கருமத்தினை திருவாய் மொழிகளாலும், ஸ்ரீமுகங்களாலும் எடுத்து வியந்து பாராட்டி அவர்களை ஆசிர்வதித்தருளிய வரலாறுகள் தமிழ் நாட்டு மேன்மக்கள் எல்லாம் நன்கு அறிந்து போற்றற்பாலன.

## நூல்கள் இயற்றியது:

நாவலரவர்கள் சிதம்பரத்தைத் தமது வாசஸ்தானமாகக் கொண்டு அங்கு வசித்துவரும் நாளில் பல தலபுராணங்களையும் ஆராய்ந்தார்கள். அதன்பயனாகச் 1. '**சிதம்பர சபாநாத புராணம்**' பாடினர். இஃது சிதம்பர மான்மியம் ஐந்தனுள் ஒன்றான வமசபாநாதமான்மியத்தின் மொழி பெயர்ப்பாயுள்ளது. தொல் ஆசிரியர் செய்யுள் நடைத்தாய் நடராஜமூர்த்தி தலம், தீர்த்த வரலாறு உணர்த்துவது.

893 செய்யுட்கள் கொண்ட இந்நூலை பார்த்திபஞு வைகாசிமீ (1885) வெளியிட்டனர். இப்புராணத்துள்ள படலங்கள்:— திருநாட்டுப்படலம், திருநகரப்படலம், நைமிசைப்படலம், புராணவரலாற்றுப்படலம், பிச்சாடனப் படலம், தேவதாருவனப்படலம், அனந்தப்படலம், புண்டரீ கப்படலம், வியாக்ரபாதப்படலம், திருநடனப்படலம், ஏம வன்மப்படலம், தீர்த்தவிசேடப்படலம், யாத்திரோற்சவப் படலம் என்பன. இப்புராணத்துக் காப்புச் செய்யுள் வருமாறு:

ஞானமிக வஃறினைஃ றிணையவுயர் திணையாகு நவிலஞ்ஞான
வீனமிக வஃறினுயர் திணையவஃ றிணையாகு மென்று தேற்றன்
மானவஃ றிணைமேலு மாண்டவுயர் திணைகீழும் வடிவிற்காட்டித்
தேனமரும் பொழிற்றில்லைச் சிகரிவாழ் கற்பகத்தை வணக்கஞ்
செய்வாம்.

இது முதலாக இதன்கண் சபாநாயகர், சிவகாமியம்மை, தக்ஷிணாமூர்த்தி, கற்பகவிநாயகர், வயிரவக்கடவுள், அறு முகக்கடவுள், அகத்தியமுனிவர், சமயகுரவர், தில்லைவாழந் தணர், அறுபத்துமூவர், சேக்கிழார்நாயனர், சந்தானகுரவர், ஏனைநாயன்மார், நமச்சிவாயதேசிகர் முதலிய குரவர், திரா விடமாபாடியகாரர் வணக்கச் செய்யுட்கள் சொற்சுவை பொருட்சுவை நிரம்பியுள்ளன.

### சபாநாயகர்

பொன்பூத்த மணிமன்று ளானந்த நடங்காணப்
புகுவோர்க் கிந்தக்
கொன்பூத்த குஞ்சிதமென் பாததரி சனத்தினே
கூடு முத்தி
மென்பூத்த பிறமுயற்சி வேண்டலெனுங் குறிவாதா
பயத்தின் மேவ

மன்பூத்து நடங்குனிக்கும் பெருவாழ்வைப் பணிந்தேத்தி
வாழ்வா மன்னே.

## சிவகாமியம்மை

நிறைந்திடும் பரனேந் தொழின்முறை குயிற்ற
நிகரிலாச் சிவமுதலாக
வறைந்திடு மேழு பேதமாய் மன்னி
யடைதரற் கேற்றிடத்தானு
முறைந்திடு சத்தி முன்னெழு வகையா
யுயிரொடெப் புவனமுமளித்துச்
சிறந்தசிற் சபையி னிருத்த சான்றாகித்
திகழ்சிவகாமியைப் பணிவாம்.

## தில்லைவாழந்தணர்

எல்லைகாண் டற்கரிய தியாகேசப் பிரான்சுருதி
யியம்பும் வாயால்
தில்லைவா ழந்தணர்த மடியாற்கு மடியேனென்
றெடுத்த சீரார்
நல்லவே தாகமங்கள் கரைகண்டோர் நாமிவரி
லொருவ ரென்று
சொல்லமா நடராசற் பெறுமூவா யிரமுனிவர்த்
தொழுது வாழ்வாம்.

அவையடக்கத்துள் வரும் செய்யுள்களில் முதற் செய்யுள் :

“அருள்பெருக்கு மேமசபா நாதமான் மியமதனை
யாய்ந்து நீரற்
பொருள்பெருக்கு முயர்தமிழாற் புராணமுறை கூறுகெனப்
புலமை சான்ற
தெருள்பெருக்கு நடராசன் றிருவடிக்கன் புடைமறையோர்
செப்பு மாற்ரு
லொருவழிப்பட் டெழுமாசை யனிதூண்டத் தமியேனீ
துரைக்க லுற்றேன்.”

என்பது. திருநாட்டுப் படலத்துள் முதற்செய்யுள்.

கொன்றை யங்தொடை மிலேச்சிய சடைமுடிக்கூத்த
ரொன்று பேரருட் பிராட்டியொ டுலகெலாமுய்ய
நின்றவம்பலத் தில்லையை யகந்தழீஇ நீடி
மன்றவோங்குறு பொன்னிநாட் டணிநலம் வகுப்பாம்.

என்பது. காவிரிநதி வளம் பொருந்துதலால் சோழ நாடானது பொன்னிவளச் சென்னிநாடு என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்றது. அந்நதியின் சிறப்பைக் கூறும் கவிகளில் ஒன்று:

புண்ணியப் புனனாட்டுள்ள பொருவிலாக் குறிஞ்சி முன்னா
வெண்ணிடு நிலங்கள்யாவு மிவ்வகை குறும் பெறிந்து
திண்ணிதி னடிப்படுத்துத் திருந்துறச் செங்கோ லோச்சித்
தண்ணளி மிகுந்தெஞ்ஞான்று சராசர மோம்பும் பொன்னி.

என்பது. திருநகரப் படலத்தில் முதற்செய்யுள்.

திருவளர் பிரமாண்டத்துச் செறிந்தபல் புவனம்யாவு
முருவளர் பலவுறுப்பா யொளிர்தர வுயருந்தில்லை
பெரியவவ் வுறுப்பியாவுந் தொழிற்படப் பிரேரகஞ்செய்
யிருதயகமலமாமே லதன்புக ழெண்ணற் பாற்றே.

என்பது. தில்லையின் பெருமை கூறும் செய்யுட்களிலொன்று:

திருவினாற் கவினாற் றேசாற் றிருத்தத்தாற் சிறப்பு வாய்ந்த
வுருவினா லுயர்வான் மாண்பா லொழுக்கத்தா லோத வொண்ணா
வருமையாற் புகழா னன்கா வாக்கத்தா னறிவா னான்ற
பெருமையாற் றனக்குத் தானே யுவமையாம் பிறங்கு தில்லை.

என்பது. நாற்பாதங்களில் நின்று அந்நெறிகளில் வழுவாது தருமபரிபாலனஞ் செய்வோர் இடங்களைப்பற்றி வருஞ் செய்யுட்களாற் கூறுகின்றார்:—

அனாதி சைவனுஞ் சிவபிரான் முகமைந்தி லடைந்து
பினாதி மாறின்றி யாகம மறைநெறி பேணி
மனாதி மூன்றினுஞ் சிவனருட் பணிபுரி மாண்பா
ரினாவ கன்றநல் வேதிய ரிருக்கைக ளீண்டும்.

அரிய ஞானிக டிருமட மொருபுடை யணவும்
பெரிய யோகியர் திருமட மொருபுடை பிறழுங்
கிரியை பேணுநர் திருமட மொருபுடை கெழுமுஞ்
சரியை யாளர்க டிருமட மொருபுடை தழுவும்.

அன்னசாலைக ளொருபுடை யரியமா முனிவர்
பன்னசாலைக ளொருபுடை பலகலை விதங்க
ணன்னர் நான்மறை யாகம முறைப்பட நாடும்
பொன்னின் மாமுடிப் பட்டிமண் டபமொரு புடையே.

கீதமேம்படு நான்மறை யோதுபல் கிடையு
நாதமேம்படு நால்வர்செக் தமிழ்பயில் களனும்
போதமேம்படு தொண்டர்தம் புராணமு நடேசன்
வேதமான்மிய மைந்துமோ திடங்களு மிகுமே.

உம்பர் நாயகனும் இறைவன் திருக்கோயிலின்கண் அமைந்துள்ள மண்டபங்களின் சிறப்புக்களை வரும் செய்யுட்களால் கூறுகின்றார்.

நவந்தரு மைந்தொழி னடத்த நாதனார்
நவந்தரு பேதமாய் நண்ணிடச் சபை
நவந்தரச் சமைந்தெனச் சிகரி நான்குமொண்
ணவந்தரு கூடங்க ணண்ணி யோங்குமே.

## ஆயிரக்கான்மண்டபம்

அண்ணலார் திருவபி டேக மாடுசீர்
வண்ணவா யிரமணிக் கால்செய்ம் மண்டபம்
புண்ணிய முனிவருஞ் சுரரும் பூதரும்
மண்ணகத் தடியரு நெருங்கு மாட்சித்தால்.

## கல்யாணமண்டபம்

நீற்றொளி திகழ்தரு மேனி நின்மலன்
மாற்றரு மறைநெறி யுயிரம ணந்திட
வேற்றசீர்ப் பரைதனை ஞான மாமண
மாற்றுபொன் மண்டபங் கவினுமாங் கொர்பால்.

## சிவகங்கை சூழ்மண்டபம்

புங்கவ ரயிர்தினைப் பொதிந்த பெட்டியி
னங்கண னருள்வடி வாய்ம லப்பிணி
சிங்கிடத் துமிக்குமோர் தீர்த்த மாஞ்சிவ
கங்கைசூழ் மண்டபங் கவினு மாங்கொர்பால்.

## குமரவேள்கோட்டம்

அமரர்வாழ் வுறத்திரு வுளங்கொண் டன்றொரு
சமரம்வேட் டயிற்படை தாங்கு செங்கைநங்
குமரவேள் சின்மயக் கோட்ட மன்பர்தந்
திமிரவெவ் வினைகெடத் திகழு மாங்கொர்பால்.

## விநாயகர் கோயில்

அநாமய னைங்கர னுகு வாகனன்
விநாயக னெம்பிரான் விமலக் கோயினன்
மனுதியின் வழிபடு மடியர் வாழ்வுற
வினுதரந் தருள்கொழித் திலங்கு மாங்கொர்பால்.

## சிவகாமியம்மையார் கோயில்

அம்பிகை பரைசிவ காமி யன்னையா
ரிம்பர்வா ழடியரை யாத்திட் டின்னல்செய்
வெம்புறு பிறவிநோய் வீட்டி மேவுசீர்ப்
பைம்பொனு லயமொளி பரப்பு மாங்கொர்பால்.

## திருமூலட்டானம்

பரசிவன் கருணையாலே பல்லுயிர்க் கருள்வழங்க
வருவுரு வாயஞான மேனிகொண் டளப்பில்சாகைச்
சுருதியோர் வடிவாயோங்குந் தூயவா னீழன்மேவு
மொருதிரு மூலட்டான முறையிறந் தொளிருமோர்பால்.

## பேரம்பலம்

மாதவன் விரிஞ்சனுதி வானவர் முனிவரேனோ
ராதரம் பெருகவேத்த வளப்பிலா ஞானனந்த

னாதனே லக்கமேவு நலங்கிளர் தேவமன்றென்
ரோதுபே ரம்பலம்வா னுற்றொளி விரிக்குமோர்பால்.

## நிருத்தமண்டபம்

கார்த்திரு மேனிமாயோன் முதலியோர் கலங்கியோட
வார்த்தெழு மாலங்கண்டத் தடைத்தருள் சுரர்தவண்ண
லூர்த்துவ நடங்குயிற்று மொருபெரு நிருத்தமன்றம்
வார்த்தைகட் கதீதமான திருவினல் வயங்குமோர்பால்.

## தம்பக்கொடி

வேற்றுப்புன் சமயத்தெய்வம் யாவையும் வினையுட்பட்டுத்
தோற்றுத்தன் ஞணைதாங்கத் தொலைவின்றி நிலவலாலே
நீற்றுச்செஞ் சடைப்பிரானே பதியென நிறுவுந்தம்ப
மேற்றுச்சீர்க் கொடிவான்போகப் பொதுவின்முன் னெழுந்
[திலங்கும்.

## தெய்வசபை

கவினெலா மொருவழிப்படத் திரண்டரோ காமர்
நவமணிக் குவைகுயின்று சித்திர முயிர்நண்ணச்
சிவணியோர் பசும்பொற்சபைக் கெதிருறீஇத் திகழு
மவதிதீர் பெருந்தெய்வமா மண்டப மதுவே.

## பொன்னம்பலம்

காதனந்தியம் பெருந்தகை காவல்வீற் றிருப்பாய்
வேதமோதினர் தில்லைவா ழந்தணர் மிடைந்தே
போதொராறினு நிருத்தர்பூ சனைபுரி யிடனய்ச்
சோதிமேவு பொன்னம்பல மலவிரு ளெக்கும்.

## தம்பங்கள்

சுத்தமாயை முன்ஞன தத்துவம்பல சூழ்போம்
பித்தியாதிபல் லுறுப்புமாய்ப் பிறங்கிடப் பெரிய
சத்தியொன்பதுந் தூபிக ளாகிமேற் றயங்க
வித்தையாவுமைம் பீடத்துந் தம்பமாய் மிளிர.

சித்தநற் கமலத் தேமறை பொருளாய்ச்
சிறந்தகா ரணமதாய் வேதாந்
தத்தினுற் றெரிக்குஞ் சோதிபுண் டரீக
புரத்திடைத் தரிசிக்கப் படுமால்.

ஆசிரியர் இப்புராணத்தில் சைவாகமங்களின் நுண் பொருள்களை வகுத்து வேண்டியவாறு போதிக்கும் வழக்குடையார். அதனால் இப்புராணம் சைவசித்தாந்தத் தனிப் பொருள் தெரிப்பது.

இப்புராணத்துக்குச் சிறப்புப்பாயிரங்கள் திருவாவடுதுறையாதீனத்து ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளும், ஸ்ரீமத் ஆறுமுகசுவாமிகளும், இந்நூலாசிரியர் மாணாக்கர் சிதம்பரம் அ. சோமசுந்தரம் முதலியார் அவர்களும் இயற்றியுள்ளார்கள்.

## 2. சிவகர்ணாமிர்தம்:

இது அப்பய தீக்ஷித யோகிகள் வடமொழியில் இயற்றிய சிவகர்ணாமிர்தம் மொழிபெயர்ப்பாயுள்ள வசன கிரந்தம். பூர்வபக்கம், சித்தாந்தமென இருபகுதித்தாய்ச் சிவபரத்துவம் நுதலுவது. இந்நூலை, திருப்பனந்தாட் காசி மடாதிபதி, ஸ்ரீமத் குமாரசுவாமிச் சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி நாவலரவர்கள் இயற்றி, பார்த்திபஞு ஆவணிமீ (1885) வெளியிட்டனர். இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரங்கள் திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளும், ஸ்ரீமத் ஆறுமுக சுவாமிகளும், ஸ்ரீமத் பழனிக்குமார சுவாமிகளும், கும்பகோணம் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் உ. வே. சாமிநாதையரவர்களும், சேற்றூர்ச் சமஸ்தான வித்துவான் சுப்பிரமணிய கவிராசர் அவர்களும்

திருவாவடுதுறை ம-ா-ா-ஸ்ரீ பொன்னுச்சாமிப் பிள்ளை அவர்களும் இயற்றியுள்ளார்கள். இந்நூலின்

தற்சிறப்புப்பாயிரம்:

வாகைமாடநற் றொழுதுமாதவச் சிவஞான
யோகிசுப்பிரமணிய தேசிகனை புண்ணிறீஇத்தே
மீகொளப்பதிக் கிதனருள் சிவகர்ணமிர்தத்தை
யூகமார்தமிழ்ப் பெயர்த்துநாவலர் பொருட்டுரைப்பாம்.

## 3. சதுர்வேத தாற்பரிய சங்கிரகம்:

இது வடமொழியில் அரதத்தாசாரியர் இயற்றிய சதுர்வேத தாற்பரிய சங்கிரக மொழிபெயர்ப்பாயுள்ள வசன கிரந்தம்; பரமசிவனே நான்கு வேதங்களாலும் எடுத்தோதப் படும் பரம்பொருளென்று சாதிப்பது. நாவலரவர்கள் இதன் முதற்பதிப்பை தாதுஸு சித்திரைமீ லும், இரண்டாம் பதிப்பை சர்வசித்துஸு வைகாசிமீ லும் (1887) வெளியிட்டனர். அம்மொழிபெயர்ப்புப் பிரதிகள் கிடைத்தல் அரிதாதல் பற்றி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் இரத்தாட்சிஸு ஆவணிமீல் (1924) அந்நூலை மூன்றும்பதிப்பாக வெளியிட்டனர். கழகப் பதிப்புரையில் சுருதிசூக்திமாலை யென்னும் சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தின் மகிமையைக் கூறுமிடத்து வரும் விசேடக் குறிப்பு வருமாறு:—

"இத்துணைச் சிறப்பு வாய்ந்த அந்நூல் வடமொழியில் இருத்தலின் அஃது அம்மொழிவல்லார்க்கே பயன்படுவதாகின்றது. வடமொழிக் கல்வி அருகிவரும் காலநிலையைக் கருதி அந்நூலைப் பல்லோர் தமிழில் மொழிபெயர்த்தார்கள். அவற்றுளெல்லாம் சிறந்ததும், முதனூற்பொருளைத் தெளிவு

பெற விளக்கித் தமிழ்ச்சுவை ததும்பி நிற்பதும், திருக் கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து மகா வித்துவானுய் இருந்த யாழ்ப்பாணம் வடகோவைச் சபாபதி நாவலரவர்கள் செய்த மொழிபெயர்ப்பே............"

## தற்சிறப்புப்பாயிரம்

மதியணி சடைமுடி வானவ னளித்த
கதிதரு களிற்றின் கண்ணரு ளூறீஇச்
சற்குரு நாதன் பொற்கழல் வணங்கி
வரம்பெறு கலையெலா மொருங்குமுழு துணர்ந்த
விரதத் தாரடி புனைந்த மேலோ
னரதத் தாசா ரியகு ளாமணி
சிவனே பரனெனத் தேறிய யாவரும்
வடமொழி யதனிற் றிடமுற வருளிய
முதிர்போதங் காட்டு முதனூ லான
சதுர்வேத தாற்பரிய சங்கிர கத்தினை
யம்முறை மொழிபெயர்த் தரும்பொரு டோன்றச்
செம்மைசேர் கடாவிடை சேர்கத் தியமாத்
திருந்த நுனித் தெணிச் செய்குவ
னருந்தமிழ் நாவலோ ரறிதற் பொருட்டே.

## சிவவணக்கம்

எவன்வணக் கத்தினுக் குரியனெவன் குணங்களா னிறைந்தோ
னெவன்வழி பாடியம்புநா ராயணமென் னுபநிடத
மெவனம்முயிர்ப் பிரேரகன் மற்றெவன் வேள்விக் கெலாமிறை
னவனுருமீச வுனைக்கதி யிலியான் சரணடைந்தேன். [வ

வேதத்து மற்றதனுக் கவிரோத தந்திரத்தும்
விமல வுன்னைப்
போதிக்கும் வாக்கியங்க ளெவற்றினையு மறிந்தவற்றூற்
போந்த மூட

வாதத்துக் கிடமாகாத் தாற்பரியத் தினைச்சுருக்கி
வகுப்பா னுற்ற
பேதைக்குட் பேதையா மெனக்கருளி மெய்ந்நெறியிற்
பிரேரி யெந்தாய்.

## நூல்

"வேதமாவது: மந்திரம், அருத்தவாதம், விதிவாக்கிய மென மூவகைப்பட்டுப் பிறவாக்கியங்களைப் பற்றாது தானே பிரமாணமாகி, விமற்சரர்க்கன்றிப் பிறர்க்கறியப்படாத மெய்ப்பொருளினையுடைத்தாய் ஈசுரனையே அறிவிப்பதாம். இனி ஈசுர சத்தம் யோகத்தாற் பிறகடவுளரையு முணர்த்து மேனும், யோகரூடியினாற் சிவபிரானையே யுணர்த்தலின் அஃதவர்க்கேயுரிய பெயராம். யோகத்தினும் ரூடிவலி யுடைத்தென்பது மீமாஞ்சை வழக்கென அறிக. இது பற்றியன்றே நிகண்டு நூலுடையார் சிவாதி நாமங்கள் போல இதனைச் சிவநாமமாகக் கொண்டோதுவாராயிற் றென்க."

இந்நூல் 60-பக்கங்கள் கொண்டது. இந்நூலிறுதியில் வரும் வசனங்கள் வருமாறு:—

"இந்நூலைப் படித்து இதன்பொருளை உள்ளவாறுணரப் பெறுவார்க்குக் கொள்ளற்பாலது பிறிதொன்றில்லை; அறிதற் பாலதும் பிறிதொன்றில்லை; எல்லாப் பேறும் இதனாலே யுண்டாம். இந்நூல் சிவபிரானுக்கோராரமாக! மக்களுக்கு வேத சிவாகமப் பற்றை விளக்க! பசுநூற் பற்றைக் கெடுக்க! சிவபிரான் திருவடிப் பற்றை வளர்க்க!" என்பதாம்.

### 4. பாரத தாற்பரிய சங்கிரகம்:

### 5. இராமாயண தாற்பரிய சங்கிரகம்:

இவ்விரண்டும் வடமொழியில் அப்பய தீக்ஷித யோகிகள் இயற்றிய பாரத தாற்பரிய சங்கிரகம், இராமாயண தாற்பரிய சங்கிரகம் மொழிபெயர்ப்பாயுள்ளன. பாரதத்தானும் இராமாயணத்தானும் நுதலப்படும் பரம்பொருள் பரமசிவனென்பது அறிவுறுத்துவன.

தற்சிறப்புப்பாயிரம்

ஆரியத் துயரப் பதீக்ஷிதன் முனமறைந்த
பாரதத்தின் றாற்பரிய சங்கிரகத்தைப் பாடற்
சீரியற் றமிழா லுரைசெய வருள்செய்ய
வீரமும்மதக் குஞ்சரப் பிரானடி விழைவாம்.

—பாரத தாற்பரிய சங்கிரகம்.

எங்குமொரு தானாகி நிறைகைலைச் சிவக்களிறன்
றிமையச் சாரற்
றங்கவருட் பிடிதழீ யளித்தவொரு கயமுனிதா
டொழுது போற்றிப்
பொங்குபுகழ் வடமொழியிற் பூசுரர்கோ னப்பதீக்ஷி
தன்முன் செய்த
சங்கையிலி ராமாயணத்தின் றாற்பரிய சங்கிரகந்
தமிழாற் செய்வாம்.

—இராமாயண தாற்பரிய சங்கிரகம்.

இந்நூல்களை நாவலரவர்கள் தாரண௵ புரட்டாதி௴ (1884) வெளியிட்டனர். இராமாயண தாற்பரிய சங்கிரகம் இரண்டாம் பதிப்பு உரையுடன் துறைசையாதீன வெளி

வீடாக சித்திரபானுஹு தைமீ ல் (1943) வந்துளது. பாரத தாற்பரிய சங்கிரகம் உரையுடன் விகிர்திஹு தைமீல் (1951) அவ்வாதீன வெளியீடாக வந்துள்ளது.

## 6. யேசுமத சங்கற்ப நிராகரணம்:

இது யேசு மதத்தர் கொள்கை பூர்வபக்கமாதலைத் தருக்கத்தினாற் றெரிப்பது.

சைவமாகிய தாமரைத் தடமொளி தழைப்பப்
பொய்வரும் விவிலிய கயிரவம் பொலிவிழப்ப
மெய்வரும் புலவோ ரளிகூட்டுண விவனால்
தெய்வஞா யிறொன் றெழுந்தெனத் திகழ்ந்ததையன்றே.

இது நீதிபதி சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் உதவிய சிறப்புப் பாயிரத்துட் கண்டது.

நாவலரவர்கள் 168 செய்யுட்கள் கொண்ட இந்நூலினை பிரமாதிஹு மேடரவியில் (1879) இயற்றினர். அதனைச் சித்திரபானுஹு வைகாசிமீ ல் நல்லூர் சிற். கைலாசபிள்ளை வெளியிட்டனர். (1882)

## 7. இலக்கண விளக்கப் பதிப்புரை மறுப்பு:

இஃது இலக்கண விளக்கச் சூறாவளியின்மேல் சிலர் நிகழ்த்திய பழியை மறுத்து அதன் சிறப்பைக் கூறும் வசன நூல்.

## 8. வைதிக காவிய தூஷண மறுப்பு:

இது பெரியபுராணம், இராமாயணம், தணிகைப் புராணம் என்னும் வைதிக காவியங்களை புறக்கணித்துச் சிந்தாமணி என்னும் அவைதிக காவியம் பாராட்டினாரை

நியாயத்தினால் மறுத்து வைதிக காவிய மாட்சியினை நாட்டும் வசன கிரந்தம்.

## 9. ஞானசூடாமணி:

இது சிரவணமாதி நான்கும் பராபர ஞானமாய் அடங்குமாறு நிரூபிப்பது. இந்நூலின் இரண்டாம்பதிப்பு துறைசையாதீனம் 19ம் வெளியீடாக வந்துளது.

## 10. ஞானாமிர்தம்:

இது சமயங்களெல்லாம் முழுமுதற்கடவுள் ஒருவன் ஆணையிற்றோன்றி அதிகாரி பேதம் பற்றித் தாரதம்மிய முற்று நிற்கும் முறைமையுணர்த்தும் வசன கிரந்தம்.

ஞானாமிர்தம் - சமயம். இது குவாலாலம்பூர் சைவ சித்தாந்தசங்கத்தின் முதல் வெளியீடாக அக்ஷயஹூ கார்த்திகைமீ (1926) சென்னை சாது அச்சுக்கூடத்தில் (பிரதிகள் 2000) பதிப்பிக்கப்பட்டது. மேலும் இந்நூல் துறைசையாதினம் 25ம்வெளியீடாகவும் பதிப்பிக்கப்பட்டது (1949). முன்னரே சித்தாந்தப்பத்திரிகையில் 1920ம் ஆண்டிலும் வெளிவந்துமுளது.

## 11. திருச்சிற்றம்பல யமகவந்தாதி:

### இதன் சிறப்புப்பாயிரம்

சீரார் தென்னீழ வடகோவையான் சிவன் சேவடிக்கீழ்
நாரார் சுயம்புமன் பெற்ற சபாபதி நல்லறிஞ
னேரார்சிற் றம்பல வந்தாதி மாலை இசைத்தணிந்தான்
காரார் பொழிற்புலி யூர்மன்ற வாணன் கழலிணைக்கே.

## இந்நூலிலுள்ள சில அருஞ்செய்யுட்கள்:—

திருத்துங்க வந்த ரோம்புநல் வேள்வித் திருமறைய
திருத்துங்க மானசிற் றம்பலம் பாடத் தமியனுளந்
திருத்துங் கருணைக் கடலே யடைக்கலங் கங்கைசிரத்
திருத்துங்கண் மூன்றுடைத் தேவே கையிலைப் பருப்பதனே.

மாணிக்க வாசகமார் வயற்றில்லைச் சிற்றம்பலவ
மாணிக்க வாசகர் காணநின்றோய் மறைத் தாதையைக்கொன்
மாணிக்க வாசகலச் செய்த சங்கர வாக்கிற்பிர
மாணிக்க வாசகப் பொய்யர்க்குப் போல மறையலெற்கே.

சித்தாந் தலைவற் புலியூர்ச்சிற் றம்பலஞ் சென்றுதரி
சித்தாந் தலைவைத்த தேவசதாசிவ வென்றுபழிச்
சித்தாந் தமையவன் றன்னடி ஞானத்திற் சேர்த்தொன்றுசெய்
சித்தாந்த சைவான் றேபிற வாமுத்திச் செல்வர்களே.

சிற்றம்பலம் விளக்கும் பொருளீந்து சிறுமியரெச்
சிற்றம்பலம் பகரப் பெறுவார் கொல்சிச் சீயினருட்
சிற்றம்பலம் மைசிவ காமியோடு சிவனடஞ்செய்
சிற்றம்பலப் பணிசெய்திடிற் சேரும்பே ரம்பலமே.

பேரம்பலத் தில்லைச் சிற்றம்பலவன் பிறங்கறிவுப்
பேரம்பலத் தைப்பெற வருள்செய்யும் பெருந் தகைத்துப்
பேரம்பலத்த னிளவலிற் கொண்டவன் வேணிக் கங்கைப்
பேரம்பலத்தைத் தூக்கும் பிறையொ டணிந்தவனே.

சபாபதியாகம வேதந்தரும்பதி சார்பவநா
சபாபதியாகுந் தில்லைப்பதி சிற்றம் பலப்பதிவஞ்
சபாபதியானங் கெடுத்தடியேன் மனந்தன்னிலின்னே
சபாபதியாவுனைப் பாடத்திருவரு டந்தருளே.

சத்துச்சித் தானந்த மாகிமுப் பத்தறு தத்துவவா
சத்துச்சித் தானந்த வின்றி விளங்குஞ் சதாசிவனே
சத்துச்சித் தானந் தவறு திடவரு டாவிடமே
சத்துச்சித் தானந்த னூர்க்கருள் சிற்றம் பலத்த வெற்கே.

விண்டல மண்டருய நஞ்சமுண்ட கண்டனிவை
விண்டல மண்டரு செற்குவை யென்ன விரிதில்லையான்
விண்டல மண்ட வுயருஞ்சிற் றம்பல மேவினர்க்கு
விண்டல மண்டலம் வாழ்த்திட நல்கு மிளிர்திருவே.

## 12. திருவிடைமருதூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி:

மத்தியார்ச்சுனம் என்று சொல்லப்படும் திருவிடைமருதூர்க்குச் சென்று மகாலிங்கப்பெருமான் நன்முலை நாயகியை வணங்கி திருவிடைமருதூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி என்னும் பிரபந்தம் பாடினர். இதிலுள்ள

### காப்புச் செய்யுளொன்று:

மதிவளரு மணிமாட வரிசைதிகழ் தருமருத
பதிவளர்மா லிங்கேசர் பதமலரி னணிபாக்குத்
துதிவளரும் பதிற்றுப் தந்தாதி தொடுக்கமத
நதிவளருங் கரடகய முகப்பெருமா னடிகயப்பாம்.

மற்றொரு செய்யுள்:—

தேவார வானந்தத் தெள்ளமுத மடுத்ததிருச்
செவிக்கா லெட்டே
ஞவாரப் புழுத்தபுலை நாயினேன் பிதற்றுமிந்த
நலமில் புன்சொற்
பாவாரப் படுங்கொலோ வெம்பெருமான் பரமேட்டீ
பரம முத்தக்
கோவாரக் களபமுலைக் கோமாட்டிக் கொருகொழுந
மருத வாழ்வே.

இதனல் அருட்புலமையுடைய சமயகுரவர் முதலான மெய்யடியார் திருவருட்பாக்கள் வேறு; இலக்கணப்புலவர் பாக்கள் வேறு என்பது தெளிவாகும்.

திருவிடைமருதூருலாவில் மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம்பிள்ளை "வல்லார் திருவருட் பாவோடு உலகிற்சேர் பசுக்கள் பாவும் திருவருட் பாவெனச் செல்லுமே" என்று பாடியிருப்பதும் இக்கருத்தையே கொண்டதாம்.

இந்நூலின் இரண்டாம் பதிப்பு துறைசை ஆதீன வித்துவான் பார்வையில் திருவிடைமருதூர்க்கோயில் அதிகாரியாரால் 1952ல் வெளியிடப்பட்டுளது.

**13. மாவையந்தாதி:**

**14. சிதம்பர பாண்டிய நாயக மும்மணிக் கோவை:**

**15. வடகோவைச் செல்வ விநாயகர் இரட்டை மணிமாலை:**

**16. நல்லைச் சுப்பிரமணியக்கடவுள் பதிகம்:**

**17. வதிரிநகர்த் தண்டபாணிக்கடவுள் பதிகம்:**

**18. புறவார்பனங்காட்டூர்ப் புறவம்மை பதிகம்:**

**19. சிவஞானயோகிகள் குருபூசைமகோற்சவம்:**

"குறியமுனி யருளியமெய் வரத்திஞ லவதரித்துக்
கோதின் ஞானத்
துறைசைநமச் சிவாயகுரு வருட்கடலும் வடமொழிதென்
மொழிப்பேர்த் தூய
நிறைகடலு முண்டுபுனி தாத்துவித சித்தாந்த
நிலவப் பூமேன்
மறைமொழிமெய்ச் சிவஞான பாடியந்தென் மொழிவகுத்த
யோகி வாழி."

இது நாவலரவர்கள் இயற்றிய சிதம்பரசபாநாதபுரா ணத்து வரும் வணக்கச் செய்யுள்களில் ஒன்று.

## 20. திராவிடப்பிரகாசிகை:

### இதன் தற்சிறப்புப்பாயிரம்

மன்னு மாமுதற் கடவுளை மனத்திடை நிறுவி
என்னை யோர்பொரு ளாக்கொண்டாள் குரவனை யிறைஞ்சி
இன்ன மாண்திரா விடப்பிர காசிகை யென்னுந்
தன்னை நேர்தருந் தமிழ்வர லாறுசாற் றுவனல். *

### பாயிரம்

மாயிரு ஞாலத்து மன்னுயிர்த் தொகுதியு
ளூறுஞ் சுவையு நாற்றமு மொளியு
மோசையு மென்னப் பேசுமைம் புலத்தொடு
நல்லத னலனுந் தீயதன் றீதும்
பகுத்துணர் காட்சி யகத்துணர் வுளப்பட
வாறறி வும்முடை வீறுசால் சிறப்பின்
மக்களுயிர்த் தொகுதி மனவிரு ளிரீஇ
மிக்கபே ரறிவு விளக்க மேவிய
வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவனன் றருளிய வெனைவகை மொழியுளு
மறம்பொரு ளின்பம் வீடெனு நான்குந்
திறம்பா மரபிற் றெளியவறி வுறுத்தலிற்
கடவுண்மா மொழியெனப் புடவிநன் றேத்தச்
சீரியல் வரம்புடை யாரிய மொழியு
மமிழ்தியல் வரம்புடைத் தமிழ்வள மொழியு

---

* கடவுள் வணக்கம் குருவணக்கம் செய்து இந்நூலைத் தொடங்கிய ஆசிரியர் முடிவில், "திருவாவடுதுறை மாதவச் சிவ ஞானயோகி சுப்பிரமணிய தேசிகன் அருளுபதேசம் பெற்ற சபாபதி நாவலர் இயற்றிய திராவிடப் பிரகாசிகை முற்றிற்று" என மேலுங்கூறினர்.

நிகருறீஇச் சிறந்து நிலவுவ வாலவை
கலிகெழு திரைவிரீஇக் கலன்பல மாய்க்கும்
வலிகெழு முவரி வளைஇய மாட்சிக்
குறுகுநர் மனங்கண் புய்க்கல் கூடாஅ
நிறும்பூ துறநனி பொன்மய மியற்றுந்
தேவலஞ் சான்ற நாவலம் பொழிலகத்
தொன்பான் வருடத் தோங்குபா ரதமெனுங்
கரும பூமி மருவுகண் டங்களு
ளாத்த னருள்வே தாகம வழக்குஞ்
சாதி வரம்புந் தீர்த்தமுந் தலனு
மேதகத் தழுவி விளங்குந் தெய்வக்
குமரி கண்டங் குலவுறீஇ மற்றதன்
வடாதுந் தெனாது மரபுளி மன்னூஉப்
பயிலு மாலய பன்னு மிரண்டிட்
டமிழ் வரலாறு தகைபெற வெடுத்தீண்
டமைவுறக் கூறுதற் கமர்ந்தது தன்னைத்
தமிழின் றெய்வப் பழமை மரபே
புலக்கண மமலு மிலக்கண மரபே
கலைக்குவை சிவணு மிலக்கிய மரபே
யேத்தருஞ் சிறப்பிற் சாத்திர மரபென
நால்வகைப் படுத்து மேலவற் றொழிபும்
வரன்முறை நிறுவி யரிறப வகுப்பாம்
புரைதபு தமிழ்முறை திகழ்தாற் பொருட்டே.

பாயிரத்தில் ஒரு சிலவருமாறு:—

தமிழின் தொன்மை மரபினையும், அதனிலக்கண மரபினையும், அதனிலக்கிய மரபினையும், சாத்திரமரபினையும், நல்லாசிரியர் வழிநின்று தெளிதாற்குரிய நற்றவ அறிவு மாட்சியுடையரல்லாதார் சிலர் இக்காலத்துத் தாம் தாம் அறிந்தவாற்றுல் முறை பிறழக் கொண்டு தமிழ்மொழியி னும் பிறமொழியினும் பலவாறெழுதி வெளியிட்டு வரம் பழித்தலானும் அவர் உரையின் பொய்ம்மை தேறமாட்டாத

3

